Regd No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (O) P.P. 55

மாண்பு

மாலையின் மாண்பு மணத்தில். விளக்கின் பயன் ஒளியில். விழாக்களின் பயன் நமது செயலிலே இழைந்திடும் மாண்பிலே இருக்கிறது.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

இழப்பு

மனிதன் எதை இழந்தாலும் இழக்கலாம், தனது பகுத்தறிவை இழந்தானேயானால் அவன் அனைத்தையுமே இழந்தவனாகிறான்.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 22 - 8 - 1984 புதன் வெளியூர்: 23 - 8 - 1984 வியாழன் இதழ் 306

# தமிழர்களைக் கொன்று குவிக்கிறது இலங்கை ராணுவம்

## மனித உரிமையைப் பறிக்கும் கொடுமை

# இலங்கை அரசுமீது ஐ. நா. வில் புகார்

## இந்திய பிரதிநிதி ஏராள குற்றச்சாட்டுகள்

லண்டன், ஆக. 22- இலங்கை ராணுவம் தமிழர்களைக் கொன்று குவிக்கிறது. தமிழர்களின் உரிமையைப் பறிக்க காரணமாக உள்ளவர்களைக் கண்டுபிடித்து தண்டிக்க வேண்டும் என்று ஐ. நா. சபையின் தனிக் குழு கூட்டத்தில் கலந்து கொண்டு பேசிய இந்திய பிரதிநிதி கூறினார்.

சிறுபான்மை மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைக் கண்டிக்கவும், அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்குமாக உள்ள ஐ நா சபைத் துணைக் கமிஷனின் கூட்டம் ஜெனீவாவில் கூடியது.

அதில் இந்தியபிரதிநிதியாக எம், சி. பண்டாரே எம். பி. கலந்து கொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:-

இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுகிறார்கள். மனித உரிமையே அங்கு கல்லறைக்கு அனுப்பப்படுகிறது.

இலங்கையின் வடபகுதியில் வாழும் தமிழர்கள் மீது ராணுவம் மீண்டும் தாக்குதலைத் தொடுத்துள்ளது. இதனால் எண்ணற்ற தமிழர்கள் உயிரிழந்தனர் உடமை இழந்தோர் ஏராளம்.

### தண்டிக்க வேண்டும்

தமிழர்களுக்கு எதிராகப் பீதியைக் கிளப்பிவிட்டு படுகொலை புரிகிறது இலங்கை அரசு. தமிழர்களைத் தாக்காமல் இலங்கை ராணுவத்தை கட்டுப்படுத்த வேண்டும். தமிழர்களின் உரிமையை பறிக்க காரணமானவர்களைத் தண்டிக்கவேண்டும்.

தமிழர்களின் உயிருக்கும் உடமைக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்றும், இலங்கை தமிழர் பிரச்சினையை இலங்கை அரசு மனித உரிமைப் பிரச்சினையாகக் கருதி அணுகவேண்டும் என்றும் இலங்கை அரசை ஐ நா கேட்டுக் கொள்ள வேண்டும்.

தமிழர்களை தாக்கும் இலங்கை ராணுவத்தை கட்டுப்படுத்தி வைக்க வேண்டும் கலவரத்தால் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு உரிய நட்ட ஈடு கொடுத்து மறுவாழ்வு தரவகை செய்யுமாறு இலங்கை அரசை வற்புறுத்தவேண்டும்.

இலங்கையில் ஏற்பட்டுள்ள நிலைமைக்கு பேச்சுவார்த்தை மூலம் அரசியல் தீர்வுகாண வேண்டும் என்று விரும்புகிறோம் ஆனால் இலங்கையோ அதை சட்ட ஒழுங்கு பிரச்சினையாகக் கருதி ராணுவத்தை வைத்து தமிழர்களை நசுக்குவதைத் தடுத்து நிறுத்தவேண்டும்.

இவ்வாறு இந்திய பிரதிநிதி பண்டாரே பேசினார்.

துணை ஜனாதிபதி தேர்தல்:

# விறுவிறுப்பான வாக்குப் பதிவு

## பிரதமர் இந்திரா- அமைச்சர்கள், எம். பி.க்கள் ஓட்டுப் போட்டனர்

புதுடெல்லி, ஆக. 22- இந்தியாவின் எட்டாவது துணை ஜனாதிபதியை தேர்ந்து எடுக்க இன்று நடந்த வாக்குப்பதிவு மிகவும் சுறுசுறுப்பாக இருந்தது.

பிரதமர் இந்திராகாந்தி மத்திய அமைச்சர்கள் எம்.பி.க்கள் ஓட்டுப்போட்டனர்.

துணை ஜனாதிபதி இதயதுல்லாவின் பதவிக் காலம் இம்மாதம் (ஆகஸ்ட்) 30ம் தேதியுடன் முடிவடைகிறது.

புதியதுணைஜனாதிபதியை தேர்ந்தெடுப்பதற்கான தேர்தல் இன்று புதுடெல்லியில் நடைபெற்றது. நாடாளுமன்றம், மாநிலங்களவை ஆகியவற்றைச் சேர்ந்த எம். பி.க்கள் ஓட்டுப் போட்டு புதிய துணை ஜனாதிபதியை தேர்ந்தெடுக்கிறார்கள்.

இந்திரா காங்கிரஸ் சார்பில் முன்னாள் பாதுகாப்பு அமைச்சர் ஆர். வெங்கட்ராமனும் அவரை எதிர்த்து எதிர்க்கட்சிகள் சார்பில பி. சி. காம்ப்ளே வும் போட்டியிடுகிறார்கள்.

இரண்டுசபைகளையும் சேர்ந்த 788 உறுப்பினர்கள் இந்த தேர்தலில் ஓட்டுப் போட்டு புதிய ஜனாதிபதியை தேர்ந்தெடுக்க வேண்டும்.

நாடாளுமன்றம், மாநிலங்களவை இரண்டியும் தற்போதுள்ள காலியிடங்களை தவிர்த்து 702 உறுப்பினர்கள் உள்ளனர்.

நாடாளுமன்ற பொதுச் செயலாளரும் துணை ஜனாதிபதி தேர்தல தலைமை அதிகாரியுமான டாக்டர் சுபாஷ் சி. கஷ்யாப் இந்தத் தேர்தலை நடத்து வைக்கிறார்.

நாடாளுமன்ற அறை எண 62 ல இந்த தேர்தல இன்று காலை 10 மணிக்கு தொடங்கியது. மாலை 4 மணியுடன் வாக்கெடுப்பு முடியும்.

ஒரே நேரத்தில் 6 எம பி க்கள் தங்களது ஓட்டுக்களை அளிக்கும் வகையில் தேர்தல் ஏறபாடுகள் செய்யப்பட்டுள்ளன.

முதல் முதலாக ஓட்டளிப்பு தொடங்கியதுமே நாடாளுமன்ற சபாநாயகர் பலராம்ஜாக்கர்ஓட்டுப் போட்டார். அவரைத் தொடர்ந்து லோக்தளத் தலைவர் மணிராம்பக்ரி இந்திரா காங்கிரஸ் உறுப்பினர் என். ஜி. ரங்கா ஆகியோர் ஓட்டளித்தனர். பின்னர் மத்திய அமைச்சர்கள் ஓட்டளித்தனர்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த இந்திராகாங்கிரஸ் உறுப்பினர் ஆர். முத்துக்குமரன் சக்கர நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு வந்துஓட்டளித்தார்.

அவருக்கு வலதுகாலில் முறிவு ஏற்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்,

நண்பகல் 12மணி அளவில் 500 பேர்ஓட்டளித்தனர்.

பிரதமர் இந்திரா காந்தியை தொடர்ந்து ஆர். வெங்கட்ராமன ஓட்டளித்தார்.

### நேரடிப் போட்டி

ஆர். வெங்கட்ராமன் காம்ப்ளே ஆகிய 2 வேட்பாளர்களுக்கும் இந்தத் தேர்தல் நேரடிப்போட்டியாகவே அமைந்துள்ளது.

இரண்டு சபைகளிலும் பெரும்பான்மை உறுப்பினர்கள் இந்திரா காங்கிரசை சேர்ந்தவர்களாக இருப்பதால் ஆர். வெங்கட்ராமனின் வெற்றி உறுதி என்றே கூறலாம்.

இன்று காலை 10 மணிக்கு ஓட்டளிப்பு தொடங்கியதும் வாக்களிப்பு விறுவிறுப்பாகவே இருந்தது.

முதல் 1 மணி நேரத்தில் மட்டும் 262 உறுப்பினர்கள் தங்களது வாக்குக்களை அளித்தனர்.

பிரதமர் இந்தராகாந்தி 10-45 மணிக்கு தன்னுடைய வாக்கை அளித்தார்.

அதற்குசற்றுமுன்னதாக மத்திய நிதி அமைச்சர் பிரணாப்முகர்ஜி ஓட்டளித்தார்.

கொண்டா ரெட்டி சாதிச் சான்று

### தமிழக அரசு உத்திரவு செல்லும்: ஐகோர்ட் தீர்ப்பு

சென்னை, ஆக. 22- கொண்டா ரெட்டி சாதிச சான்றுகளை ஆர். டி, ஓ. அளவில் வாங்க வேண்டும் என்று தமிழக அரசு பிறப்பித்த உத்திரவு செல்லும் என்று உயர்நீதிமன்ற பெஞ்ச் தீர்ப்பு வழங்கியிருக்கிறது

ஏற்கனவே கொண்டா ரெட்டி சாதிச்சான்றுகளை தாசில்தார் வழங்கி வந்தார்.

முறைகேடுகளை தவிர்க்க ஆர். டி. ஓ. அளவில் வழங்க வேண்டும் என்று தமிழக அரசு உத்தரவிட்டது.

இதை ஆட்சேபித்து தொடரப்பட்ட அப்பீலில் உயர்நீதி மன்ற தலைமைநீதிபதி சந்துர்க்கரும், சததியதேவும் தீர்ப்பு வழங்கினர்.

தமிழக அரசு பணிகளுக்கு தமிழக அரசு பிறப்பித்த உத்தரவு செல்லும் என்று தீர்ப்பளித்து அப்பீலைதள்ளுபடி செய்தனர்.

லாரி மோதி

### 2 பேர் சாவு

சென்னை, ஆக. 22- லாரி ஒன்று தறிகெட்டு ஓடியதால் ஏற்பட்ட விபத்தில் ஒரு பெண் உள்பட 2 பேர் அதே இடத்தில் நசுங்கி செத்தார்கள்.

இந்தக் கோர சம்பவம் இன்று காலை சென்னை யானைக்கவுனி அருகே நடந்தது.

# எம். ஜி. ஆர். பிக்சர்ஸ் குஞ்சப்பன் மரணம்: புரட்சித்தலைவர் அஞ்சலி

சென்னை, ஆக. 22- எம். ஜி. ஆர். பிக்சர்ஸ் மேலாளரும் முதல்வர் புரட்சித்தலைவரின் மைத்துனருமான குஞ்சப்பன் நேற்று இரவு இயற்கை எய்தினார். அவரது உடலுக்கு மலர் மாலை வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் அஞ்சலி செலுத்தினார்.

எம் ஜி ஆர். பிக்சர்ஸ் மேலாளரும், முதல்வர் புரட்சித்தலைவரின் மைத்துனருமான குஞ்சப்பன் நேற்று இரவு 2½ மணி அளவில் இயற்கை எய்தினார். மறைந்த குஞ்சப்பனுக்கு 65 வயதாகிறது. இவர் ஒரு பட அதிபரும் கூட இவருக்கு 1 மகளும், 4 மகன்களும் உள்ளனர்.

குஞ்சப்பன் சிறிதுகாலம் உடல்நலம் குன்றி இருந்தார் நேற்று உடல நிலை மோசமாகவே தனியார் மருத்துவமனையில் அனுமதிக்கபட்டார் சிகிச்சை பலனளிக்காததால நேற்று இரவு 2½ மணி அளவில் இயற்கை எய்தினார்.

குஞ்சப்பன் உடல்பொது மக்கள் பார்வைக்காக தியாகராய நகரிலுள்ள அவரது இல்லத்தில் வைககப்பட்டுள்ளது முதல்வர் புரட்சித் தலைவர் காலை 10 மணி அளவில குஞ்சப்பன் உடலுக்கு மலர்மாலை வைத்து அஞ்சலி செலுத்தினார்.

முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையாரும் அஞ்சலி செலுத்தினார், பேரவைத் தலைவர் ராசாராம், அமைச்சர்கள் கே. ஏ. கே. அரங்கநாயகம்காளிமுத்து பொன்னையன், குழந்தைவேலு, ராகவானந்தம், அண்டே, முத்துசாமி, திருநாவுக்கரசு. சவுந்தரராசன, கோமதிசீனிவாசன், விஜயலட்சுமி, யூசுப், திட்டக்குழுத் தலைவர் பாவலர் முததுசாமி. அரசு கொறடா திருப்பூர் மணிமாறன், பேரவைபொதுச் செயலாளர் வை பெருமாள, தொழிற்சங்க அணிச் செயலாளர் சுப்பு நடிகர் பாக்கியராஜ். அரசவைக் கவிஞர் புலவர் புலமைப்பித்தன், சட்டமன்ற உறுப்பினர்கள் டி. கே. கபாலி, ஆ. வெள்ளைச்சாமி, ஏ. சி. சண்முகம், ஆர் கே பெருமாள் டி. யசோதா; தேர்வாணைக் குழு உறுப்பினர் எம். எஸ் அபதுல காதர், மேலவை உறுப்பினர்கள் ஜேப்பியார் கவிஞர் முத்துலிங்கம் பா. அங்கமுத்து அவகாபுத்தூர் ராமலிங்கம், குடிசை மாற்று வாரியத் தலைவர் சுலோசனாசம்பத், சத்தியவாணிமுத்து, டிவிநாராயணசாமி, குக செல்வம், தி நகர் மூர்த்தி. சிவசூரியன், ஐசரிவேலன், அடியார், லசதை துரைசாமி, சென்னை மாவட்ட இளைஞர் அணி செயலாளர் பாபுஜ்கவுதம், படஅதிபர் கே. ஆர். கங்காதரன், இயக்குனர் சங்கர் சத்யா ஸ்டுடியோ பதமநாபன், அரி, தலைமைக்கழக துரை மான திரையுலக அரசியல் பிரமுகர்கள் மறைந்த குஞ்சப்பன உடலுக்கு மலர்மாலை வைத்து அஞ்சலி செலுத்தினர்.

மறைந்த குஞ்சப்பன் உடல் தகனம் இன்று மாலை 4 மணி அளவில சென்னை கிருஷ்ணாம் பேட்டை மைதானத்தில் நடைபெறுகிறது.

முதல்வர் பேட்டி
4.ம பக்கம்

பெண் தகராறு:

### உருட்டுக் கட்டையால் அடித்து வாலிபர் கொலை

சென்னை, ஆக. 22 ஒரு இளம் பெண்ணைக் கிண்டல் செய்ததைத் தொடர்ந்து வாலிபர் ஒருவர் உருட்டுக் கட்டையால் அடித்து கொலை செய்யப்பட்டார்,

இந்தச் சம்பவம் நேற்று மாலைகுன்றத்தூர் அருகே நடந்தது.

வாலிபரின் பெயர் ஜம்புலிங்கம் (வயது-23) தாம்பரம் கடப்பேரியைச் சேர்ந்தவர்.

குன்றத்தூர் சினிமா தியேட்டர் அருகே இரண்டு கோஷ்டிகளுக்கிடையே நடந்த மோதலில இந்தப் பயங்கரக் கொலை விழுந்தது.

குன்றத்தூர் போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்,

### ரயில்களில் வெடிகுண்டு இருப்பதாக புரளி

சென்னை, ஆக. 22- ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் ரயில் நேற்று இரவு எழும்பூரிலிருந்து புறப்பட்டு சென்றது ரயிலில் வெடிகுண்டு இருப்பதாக புரளி வந்தது உடனே செங்கற்பட்டு ரயில் நிலையத்தில் ரயில் நிறுத்தப்பட்டு பயணிகள் கீழே இறக்கப்பட்டு ரயிலில் சோதனை நடந்தது. வெடி குண்டு ஏதும் இல்லை 4 மணி நேரம் தாமதமாக ரயில் புறப்பட்டது.

இதே போல் செங்கோட்டை பாசஞ்சரிலும் வெடிகுண்டு இருப்பதாக "மர்ம" போன் வந்தது. இதைத் தொடர்ந்து அந்த ரயிலும் 3 மணி நேரம் தாமதமாக வந்தது.

தாழ்த்தப்பட்ட மக்களுக்காக

# யாரும் சாதிக்காத சாதனைகள் புரிந்தவர் புரட்சித்தலைவர்

## சத்தியவாணிமுத்து பேச்சு

**சென்னை, ஆக. 22- தாழ்த்தப்பட்ட மக்களுக்காக அதிக சலுகைகளை அளித்து இதுவரை யாரும் சாதிக்க முடியாத சாதனைகளைப் புரிந்த சரித்திர நாயகர் புரட்சித்தலைவர் என்று சத்தியவாணிமுத்து கூறினார்.**

சென்னை துறைமுகப் பகுதி 48-வது வட்டத்தில் பேரறிஞர் அண்ணாபவள விழாவை யொட்டி கழகக் கொடியேற்று விழாவும், பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

கூட்டத்திற்கு கு. கஜேந்திரபாபு தலைமை வகித்தார். எம். வி. ராமன் முன்னிலை வகித்தார். வழக்கறிஞர் ஜேசராஜ் வரவேற்புரையாற்றினார்.

கூட்டத்தில் கலந்து கொண்டு முன்னாள் மாநிலங்களவை உறுப்பினர் சத்தியவாணிமுத்து பேசினார் அப்போது அவர் கூறியதாவது:-

இன்று பேரறிஞர் அண்ணாவினுடைய பவள விழாவினை நாம் கொண்டாடுகிறோம் அவர் மறைந்து இன்று 15 ஆண்டுகள் ஆகிவிட்டன.

இன்றைக்கு அனைத்திந்திய அண்ணா திமுகழகம் அண்ணாவின் பிறந்த நாளை கொண்டாடுகிறது அவரது பவளவிழாவினை கொண்டாடி நினைவு கூர்கிறோம்.

பேரறிஞர் அண்ணாவின் கொள்கைகளை பொன்மனச் செம்மல் முதல்வர் புரட்சித் தலைவர் இன்று கடைபிடித்து வருகிறார்.

முதல்வர் புரட்சித் தலைவர் இல்லை என்றால் இன்று அண்ணாவின் கொள்கைகள் மறைந்து விட்டிருக்கும்— மறக்கடிக்கப்பட்டிருக்கும் அண்ணாவின் பெயரைச் சொல்லவே அஞ்சும் நிலை இருந்திருக்கும்.

### ஒப்பற்ற தலைவர்

புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பில் இருக்கிறார். அவர் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் பெருநகர்களிலும் சிற்றூர்களிலும் அண்ணாவின் உருவம் தாங்கிய கொடியினை ஏற்றி அண்ணாவின் பவள விழாவினைக்கொண்டாடுகிறார்.

ஏற்றத்தாழ்வற்றமனித சமுதாயத்தை அமைக்க அண்ணா பாடுபட்டார். அதை இன்று நமது ஒப்பற்ற தலைவர் புரட்சித்தலைவர் செய்து வருகிறார்.

பசியினை அறிந்தவர் அண்ணா. வறுமையின் கொடுமையை அறிந்தவர் அண்ணா. ஏழைகளின் இன்னலை தெரிந்தவர் அண்ணா.

அண்ணாவின் வழிநடக்கும் புரட்சித்தலைவரும் பசியினை அறிந்தவர். வறுமையின் கொடுமையினை புரிந்தவர். ஏழைகளின் இன்னலைத்தெரிந்தவர்.

ஆகவே தமிழகத்தில் தினமும் பல சிரிய திட்டங்களை வகுத்து செயலாற்றுகிறார். சத்துணவு திட்டத்தை தந்தார். தன்னிறைவுதிட்டத்தினை அளித்தார். குடிசை வீடுகளை மாற்றி தீபிடிக்காதவீடுகளைக் கட்டித் தருகிறார்.

தீ விபத்தானாலும்— வெள்ள கொடுமையானாலும் அந்தப்பகுதிகளுக்கு ஓடோடிச் சென்று மக்களோடு மக்களாக பழகும் மக்கள் தலைவர் புரட்சித் தலைவர்.

தமிழகத்தில் தாழ்த்தப் பட்ட மக்களுக்காக [illegible] அரசு [illegible] பணத்தை [illegible] கருணாநிதி [illegible] [illegible] ஆனால் [illegible]

மாநில மந்திரி சபையிலிருந்து விலக்கப்பட்ட என்னை மத்திய அரசில் அமைச்சராக்கினார் முதல்வர் புரட்சித் தலைவர்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்காக அதிக சலுகைகளை அளித்திருப்பவர் புரட்சித் தலைவர் தான். இதுவரை யாரும் சாதிக்கமுடியாத சாதனைகளை சாதித்த சரித்திரத் தலைவர் புரட்சித் தலைவர் தான்.

### அரசியல் ஆக்குவதா?

முதல்வர் புரட்சித் தலைவர் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக 18 சதவீதத்தையும் பிற்படுத்தப் பட்ட மக்களுக்காக 50 சதவீதத்தையும் இட ஒதுக்கீடு செய்திருக்கிறார்.

நுழைவுத் தேர்வுபற்றி கருணாநிதியும்-வீரமணியும் கூப்பாடு போடுகிறார்கள். தாழ்த்தப் பட்டமக்களுக்காகவும்பிற் படுத்தப்பட்ட மக்களுக்காகவும் சதவிகித அடிப்படையில் இட ஒதுக்கீடு இருக்கும் வரை எந்தஅச்சமும்தேவை இல்லை. கருணாநிதி இதை அரசியல் ஆக்குகிறாரே தவிர வேறெதுவுமில்லை.

நுழைவுத்தேர்வு பிரச்சினையில் கருணாநிதி குழம்புகிறார் மற்றவர்களை குழப்புகிறார்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்காக தமிழகத்தில் இதுவரை யாரும் செய்திராத திட்டங்களை எல்லாம் நிறைவேற்றிடும் புரட்சித்தலைவருக்கு மக்கள் தொடர்ந்து ஆதரவளிக்க வேண்டும்.

இவ்வாறு சத்தியவாணி முத்து பேசினார்.

மற்றும் இக்கூட்டத்தில் இ. மதுசூதனன் எம். எல். சி., மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, எம். ஏ. காதர், கே. எல்லப்பன், வி அருள், டி. நடராஜன், எஸ். பி. டி. விஜயன், கே. வி. ஜெயகுமார், எஸ். மதி, சுந்தர், ஜெகதீசன். அஜீஸ் ஆகியோர் பேசினர். கே. பாலன் நன்றி கூறினார்.

போர்ச்சுகீஸ் சந்து பொன்னியம்மன் கோயில் தெரு ஆகிய இடங்களில் கழகக்கொடியினை சத்தியவாணி முத்து ஏற்றி வைத்தார்.

## இலவச கண் சிகிச்சை முகாம்

ஈரோடு, ஆக. 22- பெரியார் மாவட்டம் கோபி செட்டிப்பாளையத்திற்கு அருகில் உள்ள கரட்டடி பாளையம் ஊராட்சி ஒன்றிய பள்ளியில் அரசு இலவச கண் சிகிச்சை முகாம் நடைபெற்றது 510 பேருக்கு கண் சிகிச்சை செய்யப் பட்டது.

அறுவை சிகிச்சை செய்யக் கூடிய நிலையில் இருந்த 356 பேர்களுக்கு அறுவை சிகிச்சைசெய்யப் பட்டது என்று மாவட்ட ஆட்சித் தலைவர் மா. ராமகிருஷ்ணன் தெரிவித்தார்.

சென்னை

வேது வட்டத்தில்

## கழகத்தில் இணைந்த தி. மு. க. வினர்

சென்னை, ஆக. 22- சென்னை 110-வது வட்டம் திருநகரில் ப. கோதண்டராமன் தலைமையில், ஜி சுப்பிரமணி, திலகராஜ், செல்வராஜ், குப்புசாமி ஆகியோர் உட்பட 25 பேர் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது, சென்னை மாவட்டக்கழக துணைச் செயலாளர் கு. க. செல்வம், செ. சுந்தரம், எம். ஜி. ஜீவா, ச. ஏழுமலை, தாஸ், மு. மணிமாறன் ஆகியோர் உடனிருந்தனர்.

என்.டி. ராமாராவ் ஆட்சியை டிஸ்மிஸ் செய்யுமுன்பு

# ஆந்திர கவர்னர் என்னுடன் ஆலோசனை எதுவும் நடத்தவில்லை

## பிரதமர் இந்திராகாந்தி திட்டவட்டமான பதில்

**புதுடெல்லி, ஆக. 22. ஆந்திராவில் என் டி. ராமாராவ் அரசை கவர்னர் ராம்லால் டிஸ்மிஸ் செய்வதற்கு முன்பு என்னோடு ஆலோசனை ஏதும் நடத்தவில்லை என்று பிரதமர் இந்திராகாந்தி கூறினார்.**

ஆந்திராவில் என். டி. ராமாராவ் அரசைடிஸ்மிஸ் செய்து விட்டு, மாநில முதல்வராக பாஸ்கர ராவுக்கு கவர்னர் ராம்லால் பதவிப்பிரமாணம் செய்துவைத்ததும் தெரிந்ததே.

இதுகுறித்து டெல்லி நாடாளுமன்றத்திலும், மாநிலங்களவையிலும் எதிர்க்கட்சிகள் சார்பில் தீர்மானங்கள் கொண்டு வரப்பட்டன.

இதையொட்டி நடந்த விவாதத்தில் குறுக்கிட்டு பிரதமர் இந்திராகாந்தி பேசுகையில், ஆந்திராவில் என். டி ராமாராவ் அரசை கவர்னர் ராம்லால் டிஸ்மிஸ் செய்ய முடிவு எடுத்ததற்கு முன்பு தன்னோடு கலந்து ஆலோசித்தார். என்ற குற்றச் சாட்டை மறுத்தார்.

மக்களவையில் பிரதமர் இந்திரா காந்தி பேசுகையில் "எந்த ஒரு கட்டத்திலும் ஆந்திர கவர்னர் என்னை கலந்தாலோசிக்க வில்லை. செய்தி ஏஜன்சி மூலமே தகவல் அறிந்தேன். உடனே உண்மை நிலவரத்தை அறிய முயன்று கொண்டிருந்தபோது புதிய அரசை அமைக்கும் பணியில் கவர்னர் ஈடுபட்டிருந்தார், என்று கூறினார்.

கவர்னரின் முடிவு அவரது சொந்த தீர்ப்பின் அடிப்படையில் எடுக்கப் பட்டது. அவருடைய முடிவுக்கு நானோ அல்லது என்னுடைய அரசோ அல்லது மத்தியில் ஆட்சியில் இருக்கும் கட்சியோ காரணம் அல்ல என்றும் பிரதமர் குறிப்பிட்டார்.

ஆந்திர சட்டசபை கூட்டத்தை சிக்கிரமே கூட்டுமாறு புதியமுதல்வர் கவர்னரை கேட்டுக் கொண்டிருப்பதாகவும் அவர் சொன்னார்.

இந்திரா காங்கிரஸ் அல்லாத மாநில அரசுகளை மத்திய அரசு கவிழ்த்துவருவதாக கூறப் பட்ட குற்றச்சாட்டை பிரதமர் மறுத்தார். ஆளுங்கட்சிக்குள் ஏற்படும குழப்பமே அரசு கவிழ்வதற்கு காரணம் ஆகும். என் மீது வீணான குற்றச்சாட்டை சுமத்த எதிர்க்கட்சிகள் முயலுகின்றன என்றும் பிரதமர் இந்திராகாந்தி கூறினார்.

## அனகா புத்தூரில் கழகப் பொதுக் கூட்டம்

அனகாபுத்தூர் நகரக் கிளை சார்பில். அனகாபுத்தூர் நேரு ரோடில் இன்று (22.8.84) மாலை 6மணிக்கு எ. டி. சங்கர் தலைமையில், சின்னசாமி, ராமலிங்கம் பஞ்சாட்சரம் முன்னிலையில் கழகப் பொதுக்கூட்டம் நடைபெறுகிறது சி. ராமலிங்கம் கே. எம். அப்துல்ரசாக், மு. பச்சையப்பன், த. சக்கரபாணி. அ. நடராசன் மற்றும் பலர் பேசுவர். இரவு 8.30மணிக்கு சேதுராசன் குழுவினர் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

என்னால் இயன்றதை செய்கிறேன்:

# ராமாராவிடம் ஜனாதிபதி ஜைல்சிங் உறுதி

**புதுடெல்லி, ஆக. 22. "அரசியல் சட்டத்திற்கு உட்பட்டு என்னால் இயன்றதை செய்கிறேன்" என என். டி. ராமாராவிடம். ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்**

ஆந்திர மாநிலத்தில் முதலமைச்சர் பதவியில் இருந்து டிஸ்மிஸ் செய்யப் பட்ட என். டி. ராமாராவ் தெலுங்கு தேச எம். எல். ஏக்களுடன் ஜனாதிபதி ஜைல்சிங்கை சந்தித்து மனு ஒன்றை அளித்தார்.

மனுவை பெற்றுக் கொண்ட ஜனாதிபதி ஜைல்சிங் கூறியதாவது:-

எம். எல். ஏக்களை எண்ணிப் பார்த்து யாருக்கு மெஜாரிட்டி என்று தீர்மானிக்கும் அதிகாரத்தை அரசியல் சட்டம் எனக்கு வழங்கவில்லை.

ஜனாதிபதியின் அதிகாரம் என்ன கவர்னரின் அதிகாரம் என்ன என்பது அரசியல்சட்டத்தில் தெளிவாக கூறப்பட்டுள்ளது. எனவே புதிய வழக்கம் ஒன்றை நான் உருவாக்கவிரும்பவில்லை.

ஆந்திர கவர்னரிடம் இருந்து அறிக்கை கேட்டு பெறுகிறேன், நீங்கள் கொடுத்த அறிக்கையையும் பரிசிலனை செய்கிறேன்.

இரண்டையும் பரிசிலனை செய்கிறேன். அரசியல் சட்டத்திற்கு உட்பட்டு என்னால் இயன்றதை செய்கிறேன்

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

பின்னர் தெலுங்குதேச கட்சிச்செயலாளர் உபேந்திரா நிருபர்களிடம் கூறுகையில் எங்களுக்கு நியாயம் கிடைக்கும் என நம்புகிறோம் எனக் கூறினார்.

அண்ணாநகர்!

## கழக ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக 22. அண்ணா பவள விழாவை யொட்டி சென்னை 79-வது வட்டம் அண்ணா நகர் தொகுதி கழக ஆலோசனைக் கூட்டம் நாளை 23ம்தேதி மாலை6மணிக்கு அவைத் தலைவர்எஸ் உத்திராபதி தலைமையில், பகுதி செயலர் வ. கோதண்டராமன் முன்னிலையில் நடைபெறுகிறது.

வட்ட செயலர் இல்லம்19 திருவள்ளுவர்புரம் முதல் தெருவில் நடைபெறும்இக் கூட்டத்தில் வட்ட நிர்வாகிகள் மற்றும் மன்ற நிர்வாகிகளும் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறார்கள்.

## மு. ஒலி பொய் செய்திக்கு மறுப்பு

சென்னை, ஆக 22. சென்னை, கோடம்பாக்கம் சிறு வியாபாரிகள் சங்கத்தலைவர் டி. சற்குணராஜ் அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

20ந் தேதிய முரசொலி இதழில் வடபழனியில் வசூல்வேட்டை என்ற தலைப்பில் வெளிவந்துள்ள செய்தி முற்றிலும் தவறானது. அச் செய்தியில் குறிப்பிட்டவாறு அங்குஎந்தத்தவறும் நடைபெறவில்லை இவ்வாறு பொய் செய்தி வெளியிடுவது கண்டிக்கதக்கது' இவ்வாறு சற்குணராஜ் தெரிவித்துள்ளார்.

## செல்வேந்திரன் நிகழ்ச்சிகள்

ஆக. 26-மதுரை
,, 27-நத்தம்
,, 28-அவனியாபுரம்
,, 29 மேலூர்
,, [illegible]0-மதுரை
[illegible] [illegible]ரத்துறை
செ 7 ஒட்டன் சத்திரம்
,, 9 காரைக்குடி
,, 10-அறந்தாங்கி

திருச்சியில்

# பெருந் தீவிபத்து நடந்த இடத்தில் மீண்டும் தீவிபத்து: ஒரு பீடித் தொழிலாளி கருகி சாவு

திருச்சி, ஆகஸ்ட். 22- திருச்சியில் பெருந்தீவிபத்து நடந்த இடத்தில் மீண்டும் தீவிபத்து ஏற்பட்டது. இந்த விபத்தில்பீடித் தொழிலாளி ஒருவர் கருகி செத்தார்.

திருச்சி நகரில் சிலநாட்களுக்கு முன்பு உய்ய கொண்டான் பகுதியில் உள்ள குடிசைகளில் பெரும் தீ விபத்து ஏற்பட்டது.

இந்தப் பகுதியில் குடியிருந்தவர்கள் பெரும்பான்மையானவர்கள் பீடித் தொழிலாளர்கள் ஆவார்கள்.

மொத்தம் 800 குடிசைகள் தீவிபத்தில் எரிந்து சாம்பலாயின.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு அரசின் சார்பில் உடனடி உதவிகள் வழங்கப்பட்டன.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு ரூ. 200 பண உதவி, 5 கிலோ அரிசி, வேட்டி - சேலை ஒரு லிட்டர் மண்ணெண்ணெய் வழங்கப்பட்டது.

நேற்று அதே பகுதியில் மீண்டும் தீ விபத்து ஏற்பட்டது. இந்த விபத்தில் 18 குடிசைகள் எரிந்து சாம்பலாயின.

இந்த தீவிபத்தில் பீடித் தொழிலாளி ஒருவர் பரிதாபகரமாக கருகி மரணமடைந்தார்.

திருச்சி ஸ்ரீரங்கம் பகுதியில் இருந்து தீயணைக்கும் படையினர் விரைந்து வந்துதீயைஅணைத்தனர்.

நாளை இரவு

வானொலியில்

## சுலோசனா சம்பத் பேசுகிறார்

சென்னை ஆக. 22- தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தலைவர் சுலோசனாசம்பத் நாளை 23ம் தேதி இரவு 9 15 மணிக்கு சென்னை வானொலியில் உரை நிகழ்த்துகிறார்.

"குடிசைதாருக்கு நல் வாழ்வு- குடியிருப்பிட வசதி" என்ற பொருள்பற்றி அவர் பேசுகிறார்.

சிவகாசி தொகுதியில்

## புலவர்- அறிவுடைநம்பி பேசுகிறார்.

ஆகஸ்ட், 26, 27. ஆகிய இரு நாட்களிலும். புலவர் அறிவுடைநம்பி -சிவகாசியிலும தொகுதியின் பிற பேரூர்களிலும் பேசுகிறார் மாவட்ட செயலர். கே கே எஸ் எஸ். ஆர். சட்டமன்ற உறுப்பினர்-பாலகிருஷ்ணன் ஆகியோரும் நிகழ்ச்சியில் பங்கேற்கிறார்கள்.

## மிலிட்டரி என்ஜினியர் சர்வீஸஸ்

திருநெல்வேலி அருகில் மதிற்சுவர் மற்றும் கண்காணிப்பு கோபுரம் அமைக்கும் பணிக்கு டெண்டர்கள் வழங்குவதற்கு விண்ணப்பங்களை செயற் பொறியாளர் (பி) ஸ்கைலார்க், நேவி நகர், கொலபா, பம்பாய்-400 005 அவர்கள் 8-9-84 வரைவரவேற்கும் தோராய மதிப்புத் தொகை ரூ. 90 லட்சங்கள் மிலிட்டரி என் ஜினியர் சர்வீஸ் பதிவு பெறாத ஒப்பந்ததாரர்கள் தங்களின் விண்ணப்பங்களுடன் இதர துறையில் பதிவு பெற்ற கடிதத்தின் நகலுடன் விண்ணப்பிக்க வேண்டும்.

வருமானவரி செலுத்திய சான்றிதழ்,' நிதி நிலைமை வசதிகள் மற்றும் கடந்த மூன்று வருடங்களில் எந்த அலுவலகத்தின் பணிமற்றும் பணியின் மதிப்பு இவைகளையும் விண்ணப்பத்துடன் இணைக்கவேண்டும் மிலிடெரி இஞ்சினியரிங் சர்வீசில் நடப்பு பாதுகாப்புத் தொகை இல்லாத ஒப்பந்ததாரர்கள் டேவணித்தொகை டெபாசிட்டாக ரூ. 55,000- செலுத்தவேண்டும், மேலும் விரிவான விவரங்களுக்கு 22-8-84 தேதியிட்ட இந்தியன் டிரேட் ஜெர்னலைப் பார்க்கவும்.

டிஏவிபி-683 (776) 84

---

# ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி முகாம்:

## இந்தியாவிலேயே சிறப்பாக செயல்பட்டு

# தமிழகம் முதலிடம்

## சுப்ரீம் கோர்ட் பாராட்டு

**நீலகிரி, ஆக. 22. ஏழை - எளிய மக்களுக்கு இலவச சட்ட உதவி அளிப்பதில் இந்தியாவிலேயே தமிழ்நாடு சிறப்பாக செயல்பட்டு முதலிடம் வகிக்கிறது என்று சுப்ரீம் கோர்ட் பாராட்டியுள்ளது. இந்த தகவலை நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.**

நீலகிரி மாவட்டத்தில் முதல்முறையாகமாவட்ட செசன்சு கோர்ட்டுமற்றும் மாவட்டமுனிசிப்கோர்ட்டு துவக்க விழா நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் தலைமையில் நடைபெற்றது. சென்னை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி எம். என். சந்தூர்கர் மாவட்ட புதிய கோர்ட்டுகளை தொடங்கி வைத்து பேசினார். விழாவில் கலந்து கொண்டு உயர் நீதி மன்ற நீதிபதிகள் ஜி. ராமானுஜம், எஸ். நடராஜன், கோகுல கிருஷ்ணன்; மற்றும் பிரபு எம். பி. உச்சி எம். எல். ஏ. மாவட்ட கலெக்டர் குப்தா, மற்றும் கோவை மாவட்ட நீதிபதி ஆறுமுகம், போலீஸ் டி ஐ ஜி. கந்தசாமி, ஊட்டி மாவட்ட நீதிபதி மற்றும் வக்கில்கள் பலர் பேசினார்கள். விழாவில் தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசியது வருமாறு:

நீதி மன்றங்களை உயர்வான இடத்தில் வைத்து எண்ணவேண்டும் என்பார்கள். அந்தவகையில் இன்று 7 ஆயிரம் அடி உயரத்தில் நீலகிரியில் இந்த விழா நடைபெறுகிறது.

மக்கள் பெருக்கம் அதிகரித்துள்ளது 1901ல் தமிழகத்தில் மக்கள் தொகை 1¼ கோடி தான். இன்று ஐந்து கோடிக்குமேல் தாண்டியுள்ளது.

### வழக்குகள் அதிகரிப்பு

வழக்குகள் வளர்கின்றன பிரச்சினைகள் அதிகரிக்கின்றன. மத்திய மாநில அரசுகளுக்கு இடையே ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கும் பொறுப்பு நீதிமன்றத்துக்கு உண்டு. இந்தியாவிலேயே தமிழ்நாட்டில் தான் ஏழைகளுக்குஇலவச சட்ட உதவி முகாம் மிகச் சிறப்பாக நடத்தி வருவதாக சுப்ரீம்கோர்ட் பாராட்டியுள்ளது. லார்டு மெக்காலே தான் எல்லோருக்கும் ஒரே விதமான சட்டம் என வகுத்தார்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் கூறியதுபோல் "நியாயங்கள் காயப்படுத்தக்கூடாது; காயங்கள் நியாயப்படுத்துக் கூடாது' என்பதை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.

இந்த ஆண்டு தமிழ்நாடு முழுவதும் 11 சப்-கோர்ட்டுகளுக்கும், 17 முன்சீப் கோர்ட்டுகளுக்கும் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. மது விலக்குப் பிரிவுக்கு 21 தனி கோர்ட்டுகள் தற்போதுதொடங்கப்பட்டுள்ளன, சென்னையில் ரூ 34 லட்சம்செலவிலும், சங்கல்பட்டில் ரூ72லட்சம் செலவிலும் பெரியார் மாவட்டத்தில்ரூ80லட்சத்து 40 ஆயிரம் செலவிலும் நீதிமன்றக் கட்டிடங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

### புதிய கட்டிடங்கள்

தமிழ்நாட்டில் மேலும் 1 கோடியே5 லட்சம்செலவில் புதிய நீதிமன்ற கட்டிடங்கள் கட்டும்பணி அரசின் பரிசிலனையில் உள்ளது நீலகிரிமாவட்டத்திற்கும் விரைவில் தேவையான நீதிமன்ற கட்டிடங்கள் கட்ட அரசு முயற்சி எடுக்கும். தேவைகளை அனுசரித்து தமிழக அரசு எல்லாமுயற்சிகளையும் செய்யும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்.

20 ஆண்டுகள் பணியாற்றிய வக்கீல்களுக்கு டாக்டர் நாவலர் சால்வை அணிவித்துசிறப்பித்தார். வெங்கடாசலம் நன்றி கூறினார்.

முன்னதாக சூலூர் விமானநிலையத்தில் நிதியமைச்சர் டாக்டர் நாவலருக்கு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது. கே. வி. கந்தசாமி எம். எல் ஏ சின்னராசு எம் எல் ஏ, மாவட்ட பொருளாளர் ஏ என்சாமி மற்றும் மலரவன், கதிர்வேலு, கிருஷ்ணமூர்த்தி, சிங்கை நடராஜன், ரவிச்சந்திரன் அழகிரிசமி இளங்குமரன் ஏ வெங்கடாசலம மற்றும் ஏராளமான தொண்டர்களும் அதிகாரிகளும்வரவேற்றனர் நீலகிரி செல்லும் வழியில் குன்னூரில் டாக்டர் நாவலருககு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

---



---

தமிழகத்தில்

# வனவளம் பெருக்க ரூ. 135 கோடி திட்டம்
# ஆர். எம். வீ. தகவல்

**சென்னை, ஆக.22. தமிழகத்தில் வனவளத்தைப் பெருக்க 7-வது ஐந்தாண்டு திட்டத்தில் ரூ 135 கோடியில் திட்டம் தீட்டப்பட்டுள்ளதென்று அமைச்சர் ஆர் எம் வீ கூறினார்.**

வானொலியில் "வளரும் தமிழகம்" என்ற தலைப்பில் 'காடுகள் இல்லையேல் வாழ்வு இல்லை' என்ற பொருளில் அமைச்சர் ஆர் எம் வீ பேசியதாவது:-

தமிழக அரசுகாடுகளின் பாதுகாப்புக்கு முதலிடம் தந்து அந்தப் பாதுகாப்புக்கு ஊறு விளையாத வகையில்குறைந்த அளவில் மட்டுமே வனச்செல்வங்களை பெற்று மக்களுக்கு வழங்கி வருகிறது.

தமிழகத்தை பொறுத்தவரையில் வனச் செல்வத்தைபெருக்கவும், பாதுகாக்கவுமான பணிகளில் கடந்த ஆண்டு செய்த செலவு 26 கோடி ரூபாயாகும் ஆனால் பெறப்பட்ட வருவாய் ரூ18கோடிதான் தமிழகக் காடுகளைப் பாதுகாக்கும் வகையில முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் உள்ள தமிழக அரசு தமிழ்நாட்டில் அமுலில் இருந்து வரும் 1882 ஆம் ஆண்டு தமிழ்நாடு வனச்சட்டம் போன்ற பல்வேறு சட்டங்களுக்கு தீவிரமான சட்ட திருத்தங்களை மேற்கொண்டு, கடுமையாகக் காடுகளைப் பாதுகாக்க வழி செய்தது. அரசின் இந்த வனபபாதுகாவல் கொள்கைக்கு எதிரான வழக்குகளாயினும் நடவடிக்கைகளாயினும், அவை எங்கிருந்துதோன்றினாலும், எவ்வளவு சக்தி படைத்திருந்தாலும்" அவைகளை யாவையும எதிர்கொண்டு காடுகளைப் பாதுகாக்க அரசு உறுதி பூண்டிருக்கிறது.

### அழியாத செல்வம்

காடுகள் இயற்கைத் தாய் மனித குலத்திற்கு வழங்கிய அழியாத செல்வங்கள் ... அந்தச் செல்வங்கள் எல்லா தலைமுறைகட்கும் உரிமையானவை ... அழியாத இந்த மூலதனச் செல்வத்தைஅழித்து இந்ததலைமுறைக்கு மட்டும் வருவாய் சேர்க்கும் போக்கை நமது அரசு ஏற்கவில்லை உதாரணமாக 1976 77ல, 37,665 கனமீட்டர் மரங்கள் விறகுக்காக காட்டிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டன. தமிழக அரசின் சீரிய வனப்பாதுகாவல் கொள்கையினால் கடந்த ஆண்டு வெறும் 6400 கன மீட்டர் மரங்கள் மட்டுமே காட்டிலிருந்து பெறப்பட்டன. இந்த மரங்கள் கூட வன வளர்ச்சி திட்டப் பணிகளின் போதும் இயற்கையாகவே கிடைத்தமரங்களே ஆகும். மேலும் விறகுகளுக்காக காடுகளை அழிக்கும் கொடிய நடைமுறை புரட்சித்தலைவர் ஆட்சியில் முழுவதுமாக நிறுத்தப்பட்டது. வனச் செல்வத்தைப் பேணிப் பாதுகாத்து வளர்க்கும் இந்த சீரிய பணியில் நமது அரசு லாபநஷ்ட கணக்குபார்ப்பதில்லை, மேலெழுந்தவாரியாகக் காணப்படும் நஷ்டம் என்பது கூட நெடுங்கால மதிப்பீட்டின் படி, சமுதாயத்திற்கு வரக்கூடிய மாபெரும் ஆதாயம் என்பதை உணர்ந்து தமிழக அரசு செயல்படுகிறது.

### அதிக நிதி ஒதுக்கீடு

புரட்சித்தலைவர் தலைமையில்உள்ள தமிழகஅரசு பதவி ஏற்பதற்குமுன் ஐந்தாவது ஐந்தாண்டு திட்டத்தில் ரூ 11.98 கோடி மட்டுமே வன வளர்ச்சிக்காக செலவிடப்பட்டது. ஆனால இந்த அரசின் 6வது ஐந்தாண்டு திட்ட காலத்தில ரூ 59.45கோடியாக உயர்த்தப்பட்டது. வருகின்ற7-வதுஐந்தாண்டு திட்டத்திற்குஏறக்குறைய ரூ. 135 கோடி அளவில் மாபெரும் திட்டம் வகுக்கப்பட்டு வருகின்றது என்பதிலிருந்து இந்த அரசின் சீரிய வனப்பாதுகாவல் கொளகை நன்கு புலப்படும்.

வனச் செல்வப் பெருக்கத்திற்கு, தற்போதுள்ள அரசுக காடுகள் மட்டும் போதாது என்பதைக் கருதி, ஊர்ப்புறங்களிலுள்ள புறம்போக்கு, தரிசு நிலங்களையும் பயன்படுத்திக் கொண்டு சுமார் ரூ. 106 கோடி மதிப்பில சமுதாயக காடுகள் திட்டம் ஒன்றை இந்த அரசு தயாரித்தது. அத்திட்டத்தின் முதற்படியாக, ஐந்தாண்டு அளவில் செயல்படுத்துவதற்கு, ஸ்வீடன் நாட்டு உதவியோடு, சுமார் ரூ. 45 கோடி மதிப்பீட்டில் ஒரு மாபெரும் வனத் திட்டத்தை 1981-ஆம் ஆண்டு முதல் தமிழ்நாடு அரசு செயல்படுத்தி வருகின்றது. இத்திட்டத்தினால் தமிழ் நாட்டின் கிராமங்கள்யாவும் பயன் பெறும் வகையில் செயல்முறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன; கிராமங்களில், ஏழைகளும், நலிந்தோரும் கூடுதலானபயன் பெறும் வகையில் இத்திட்டம் செயல்படுத்தப் படுகின்றது. இதுகாறும், ஊர்ப்புறங்களில் உருவாக்கப் பட்டிருக்கும் மரத்தோட்டங்களின் பரப்பு 2 லட்சத்து 30ஆயிரம் ஹெக்டேராகும், மேலும் கடந்த 3 ஆண்டுகளில "சமுதாய காடுகள்" திட்டத்தின்கீழ் 4கோடியே 18 லட்சம் மரக்கன்றுகள் மக்களுக்கு விநியோகிக்கப் பட்டன. அவற்றில் 1 கோடியே 17 லட்சம் மரக்கன்றுகள் இலவசமாகவே எளிய மக்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன

### கிராம மக்கள்

இதுபோன்ற சிறப்புப் பணிகளின் பயன்களை கிராமப்புறத்து ஏழை எளிய, பொருளாதாரத்தில நலிந்த மக்களிடம் சென்று அடையுமாறு திட்டம் செயலபடுகிறது.

மேலும் தமிழக அரசு நிர்வாகத் துறையிலும் பல்வேறு சீர்திருத்தங்களைச் செய்து, வனத்துறை நிர்வாகத்திற்கு வலுவூட்டிக் கொண்டு

6-ம பத்தி பார்க்க

---

### ரயில் மோதி பெண் மரணம்

சென்னை, ஆக. 22. பெருங்களத் தூரை சேர்ந்தவர் சுமதி வயது 15 பத்தாம் வகுப்பில படித்து வந்தாள். நேற்று தோழியைப் பார்க்க சென்றபோது தண்டவாளததை கடக்க முயன்றாள். அப்போது வைகை ரயிலால் மோதப் பட்டு மரணம் அடைந்தாள்.

---

நெல்லிக்குப்பத்தில்

### அண்ணா பவள விழாக் கூட்டம்

புதுவை, ஆக. 22- புதுவை நெல்லித்தோப்பு தொகுதி சார்பாக அண்ணா பவள விழாக் கூட்டமும் சிவராமன் எம். எல். சி. மற்றும் எம். ஜி. ஆர். இளைஞர் அணி நிர்வாகிகளுக்கு பாராட்டு விழாக்கூட்டமும் இன்று 22ந் தேதி மாலை 6 மணி அளவில் துயவர்பாளையம் ஆலை வீதியில் யோகஞானம் தலைமையில், மணிமாறன் முன்னிலையில் நடைபெறுகிறது. இக் கூட்டத்தில் சிவராமன்எம் எல்.சி. ராமலிங்கம், சீனிவாசன், பாண்டியன், பி. கே. லோகநாதன், குருசாமி, ராமலிங்கம் சின்னதுரை, புருசோத்தமன், ராதாகிருஷ்ணன், உமாபதி, வேணுகோபால், பாண்டுரங்கன், பாலசுப்பிரமணியம் சண்முகம், மற்றும் பலர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

---

### ஊதியக் குழுவிடம் சுகாதார ஆய்வாளர் கோரிக்கை

சென்னை, ஆக. 22- தமிழ்நாடு சுகாதார ஆய்வாளர் சங்கம் தங்களது கோரிக்கைகள் அடங்கிய மனுவை 4-வது ஊதியக் குழுவிடம் அளித்தது.

சங்கத் தலைவர் டி. எஸ். தியாகராஜன், தலைமையில் பொதுச்செயலாளர் பி. ஜெயராம், மாநில பொருளாளர் டி. கே. சடகோபன், சென்னை மாவட்ட செயலாளர் எஸ். இயலரசன், செங்கை மாவட்ட தலைவர் ஜி. சதாசிவம்சேலம்மாவட்ட செயலாளர் பி. செல்லப்பன் மற்றும் சங்க உறுப்பினர்கள் மனுவை கொடுத்தனர்.

---

(4-ம் பத்தி தொடர்ச்சி)

இருக்கின்றது.

1977 ல் 5880 ஆக இருந்த வனப்பணியாளர்களின் எண்ணிக்கை 1984 ல் கணக்கிடும்போது 8,485 ஆக உயர்ந்து வனத்துறைக்கு வலிமையையூட்டியுள்ளது தெளிவாகும்.

இந்தப் பணிகளை மக்களின் வாழ்க்கைக்கு செய்கின்ற, காலங்காலமாக பயன்படப்போகின்ற ஒரு நீண்ட கால சேவை எனக் கருதிக்கொண்டு தமிழக அரசு ஒரு புதிய வனக் கொள்கையை வகுத்து செயல்படுத்திவருகின்றது அரசின் பணி மட்டும் போதுமானதாகாது. மக்கள ஒவ்வொருவரும் காடுகளைக் காப்பதிலும், போற்றி வளர்ப்பதிலும் நமது மனத்தை ஈடுபடுத்த வேண்டும்.

இந்த மனப்போக்குஒரு தேசிய சேவையாகக் கருதப்பட வேண்டும். வருங்கால சந்ததிகளுக்காக இக் காலமக்கள் ஆற்ற வேண்டிய கடமையாகக் கொள்ளப்பட வேண்டும்.

மனித சமுதாய வாழ்க்கை காடுகளின் வலிமையை ஆதாரமாகக் கொண்டுள்ளது. இத்துணை சிறப்பு வாய்ந்த வாழ்க்கைக்குஆதாரமான காடுகளை என்றென்றும் போற்றிக் காப்போமாக!

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

---

கழகத்தோழர் கறுப்புக்கொடி யேற்றியதாக

# பொய்ச்செய்தி வெளியிட்ட வீரமணி ஏடு

## தென்னாற்காடு மாவட்ட கழக செயலாளர் கே. ஆர். ராமலிங்கம் கண்டனம்

**கள்ளக்குறிச்சி ஆக 22-கழக எம் ஜி ஆர். இளைஞர் அணியைச் சேர்ந்த ஒருவர் கறுப்புக் கொடி ஏற்றியதாக வீரமணியின் 'விடுதலை' ஏடு வெளியிட்டுள்ள பொய்ச் செய்தியை தென்னாற்காடு மாவட்டக்கழக செயலாளர் கே. ஆர் ராமலிங்கம் மறுத்துள்ளார்.**

இதுகுறித்து கே. ஆர். ராமலிங்கம் விடுத்துள்ள அறிக்கை யொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

19-8-84ல் விடுதலை நாளேட்டில் கள்ளக்குறிச்சியில் அ. தி. மு. க. இளைஞர் அணி பங்கேற்புஎன்று செய்தி வெளியிட்டு, 15-8-84ல் அ. தி. மு. க. இளைஞர் அணி அமைப்பைசேர்ந்தபாபுஎன்பவர் கறுப்புக்கொடிஏற்றியதாக செய்தி வெளியிட்டிருப்பது முற்றிலும பொய்.

இளைஞர் அணியில் பாபு என்ற நபரோ, கறுப்புக் கொடியேற்றிய சம்பவமோ இங்கே எதுவும் நடைபெறவில்லை, என்றும் வேண்டுமென்றே கழகத்திற்கும், எம் ஜி ஆர் இளைஞர் அணிக்கும் அவதூறு ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு வெளியிட்டதை வன்மையாகக் கண்டிக்கிறேன். அந்தநாளேட்டில் (விடுதலை, மீது வழக்கும் தொடர இருக்கிறேன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு கே. ஆர். ராமலிங்கம் தெரிவித்துள்ளார்.

---

### க. சுப்பு - வை. பெருமாள் பங்கேற்கும் கூட்டங்கள்!

சென்னை, ஆக 22- அசோக் லேலண்ட் புரட்சித்தலைவர் நற்பணி மன்றம் சென்னை மாவட்ட ஆட்டோ ஓட்டுநர் அண்ணா தொழிலாளர் சங்கம் புதுவண்ணைக் கிளை ஆகிய இரண்டு கூட்டங்களும் இம்மாதம் 24ம் தேதி நடைபெறுகிறது.

24ம் தேதி கூட்டத்தில் கழக தொழிலாளர் அணி செயலாளர் க. சுப்பு, பேரவை பொதுச் செயளாளர்வை. பெருமாள், பொருளாளர் ராஜேந்திரன், சென்னை மாவட்ட தொழிற்சங்க செயலாளர் வெ. மாயன், செங்கை மாவட்ட நலக்குழு செயலாளர் வேல்முருகன் ஆகியோர் பேசுவார்கள்.

---

## அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக செங்கை மாவட்ட மகளிர் அணி சார்பில் அண்ணா பவள விழா பொதுக் கூட்டம்

23 8 84 வியாழன் மாலை 7 மணி

பெரியார் திடல் (பரங்கிமலை ரயிலடி)

தலைவர்: எம். இராஜேஸ்வரி

சிறப்புரை: திரு **செ. மாதவன்** பி.காம்.பி.எல்.

(கழக பொருளாளர்)

அனகாபுத்தூர் இராமலிங்கம் எம். எல். சி.

ஹாஜி. கே. எம் அப்துல்ரசாக் எம். எல். ஏ.

ஆலந்தூர் எஸ். பாலன்

ஜி. பி. லெனின், எம். சீனிவாசன், ஆலந்தூர் இராதா ஆலந்தூர் கோ. மோகன், ஆர். ரவீந்திரன், ஜே. பக்தவத்சலம், மு. இராசாபாதர், மு. இராமதாஸ், எம். பி. ஜெயசந்திரன், ஏ. ஜி. சொக்கலிங்கம் டி. சுகுமார், கே. காசிநாதன்

நன்றி: ஆர். சந்தானகிருஷ்ணன்

---



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.

## தபால்-தந்தி இலாகா

நிர்வாகப் பொறியாளர், தபால் & தந்தி சிவில் டிவிஷன் எண் 11 நெ 4, கமாண்டர் இன்-சீப் சாலை, எழும்பூர், சென்னை-600 105 அவர்களால் சென்னை - நுங்கம்பாக்கத்தில் தொலைபேசி கட்டிடம் கட்டுவதற்கான முத்திரையிட்ட இனவாரி டெண்டர்கள் அங்கீகரிக்கப்பட்ட தகுதி வாய்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து 29-8-84 மாலை 3 மணிக்கு முன்னதாக வரவேற்கப்படுகின்றன.

வேலை விவரம்: நுங்கம்பாக்கத்திலுள்ள தொலைபேசி நிலைய கட்டிடத்தில் முதன் மாடியில் சுவிட்சு அறை ஆண்கள் மற்றும் பெண்கள் ஓய்வு அறை (Dormitory) க்கு அலுமினிய Cubicals அமைத்தல்.

உத்தேச செலவு ரூ 2,23,039-டேவணித் தொகை: ரூ. 5,576 - டெண்டர்கள் அதே தினம் பிற்பகல் 3-30 மணிக்கு திறக்கப்படும் நிபந்தனைகள் மற்றும் டெண்டர் பத்திரங்கள் ஆகியவை 27-8-84 மாலை 4 மணி வரை இந்த அலுவலகத்திலிருந்து ரூ. 26.10க்கு ஒரிஜினல் என்லிஸ்மெண்ட் சர்டிபிகேட் அளித்து பெற்றுக்கொள்ளலாம். டெண்டர் பாரத்திற்கான விலையை ரொக்கமாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அக்கவுண்ட்ஸ் ஆபீஸர், தபால் தந்தி சிவில் டிவிஷன் எண் 11, சென்னை 600105 அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

## ஏல விற்பனை

1 Jalam Chand Hirach and No 14 Pudu Streets 12 (31.12 79க்கு முன்பும் 24-8-82 முதல் 28-2-83 வரை) ஏலத்தேதி 5-9-84 அன்று பகல் 11-மணிக்கும் 2. Anandraj & Co 131-3 M T H Road Villivakkam ms 49 [1-3-83 முதல் 30 6 83 வரை] ஏலத்தேதி 5 9 84 அன்று மதியம் 2 மணிக்கும் 3 M Devaram 109 ... Road Ms 20 [24 8 82 முதல் 31-3 83 வரை) ஏலத்தேதி 10-9-84 அன்று பகல் 11 மணிக்கும், 4 S Kapoor chand 37, labbai street, Pudupettai, ms. 2. (1-5-83 முதல் 31 7-83 வரை, ஏலத்தேதி 10-9-84 அன்று பகல் 12 மணிக்கும் 5. Jaya prakash Kapoor chand, 24. Narayana Naicken street Pudupettai ms 2 (1 3-83 முதல் 31 5-83 வரை) ஏலத்தேதி 12-9-84 அன்று மதியம் 1 மணிக்கும் 6 HarishChandra, 3 Cemetry Road, Shenoy Nagar, Ms 30 (24-8-82 முதல் 31-5-83 வரை) ஏலத்தேதி 12 9-84 அன்று பகல் 12 மணிக்கும், 7. M. Sampath Ra Kotari, 3, Kalmandapam Road, Rayapuram, Ms 12 (1-2-83 முதல் 30-6-83 வரை) ஏலத்தேதி 12-9-84 அன்று மதியம் 3 மணிக்கும் 8) B Badrilal Sowcar 8, Tailors Road Kilpouk, Ms. 10 (1 3-83 முதல் 30 6 83 வரை) ஏலத்தேதி 12-9 84 அன்று மதியம் 4 மணிக்கும், 9) Vasanth Kumar Sethia 174 Vellala Street, Purasawalkam, ms 84 (24 8-82 முதல் 30-6-83 வரை) ஏலத்தேதி 14-9-84 அன்று பகல் 11 மணிக்கும், 10 J Mithala' Jain, 196 Ranganatha Puram, Indira Nagar Ms 20 31-12-79க்கு முன்பும் 24-8 82 முதல் 31-3-83 வரை ஏலத்தேதி 14-9-84 அன்று பகல் 11 மணிக்கும் 11. மகபதன்லால் ஜெயின், நெ 90 கிரீன்வேஸ் ரோடு, சென்னை-28 (1-3 83 முதல் 30-6 83 வரை) 14-9-84 அன்று மதியம் 1 மணிக்கும், 12. எஸ், சுந்தர்மல் ஜெயின் 90 லாட்டீஸ் பிரிட்ஜ் ரோடு அடையாறு சென்னை-20 (1-3 83 முதல் 30 6 83 வரை ஏலத்தேதி 14 9-84 அன்று மதியம் 2 மணிக்கும் 13) பாரஸ்மல் ஹஸ்மால், 162, எம். பி. எம். தெரு, பெரம்பூர், சென்னை-39 (24 8 82 முதல் 31 7-83 வரை ஏலத்தேதி 14-9-84 அன்று மதியம் 3 மணிக்கும் 14) வ. விமல்சந்த ஜெயின், 22, நரசிம்மநகர், சென்னை-12, (24-8-82 முதல் 30 6-83 வரை, ஏலத்தேதி 14-9 84 அன்று மதியம் 4 மணிக்கும்)

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரமசந்த் ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.



## இந்த ஆண்டு நடந்த நுழைவுத் தேர்வால்

# பின்தங்கிய மாணவர்கட்கு பலமடங்கு இடங்கள்

## புள்ளி விவரங்களுடன் முதல்வர் புரட்சித்தலைவர் விளக்கம்

சென்னை, ஆகஸ்ட், 22- நுழைவுத் தேர்வால் பின்தங்கிய மாணவர்கட்கு பாதகம் இல்லை முந்தைய ஆண்டை விட பல மடங்கு இடங்களை பின்தங்கியோர் பெற்றுள்ளனர் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார். பற்றிய புள்ளி விவரங்களையும் முதல்வர் வெளியிட்டார்.

சென்னை கோட்டையில் நேற்று முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது நிருபர்கள் கேட்ட கேள்விகளும் அதற்கு முதல்வர் அளித்த பதில்களும் வருமாறு -

கேள்வி:- நுழைவுத் தேர்வு மூலம் பின் தங்கியோருக்கு இந்த ஆண்டு, என்ஜினீயரிங், மருத்துவக் கல்லூரிகளில் எத்தனை இடங்கள் கிடைத்து இருக்கின்றன?

முதல்வர்: எல்லோருக்கும் பொதுவான கோட்டாவில் என்ஜினீயரிங் கல்லூரிகளில், பின்தங்கியோருக்கு 81-ல் 74 இடம் 82-ல் 99 இடம், 83-ல் 140 இந்த ஆண்டு நுழைவு தேர்வு மூலம் 250 பேர். இது தவிர 50 சதவீதம் பின்தங்கியோர் கோட்டாவில 81-ல் 579 பேர், 82-ல் 620 பேர், 83-ல் 648 பேர், இந்த ஆண்டு 958 பேர், ஆக இந்த ஆண்டு இரண்டு பிரிவிலும் சேர்த்து பின் தங்கியோருக்கு என்ஜினீயரிங் கல்லூரிகளில் 1,21... இடங்கள் கிடைத்து இருக்கின்றன.

அதுபோல் மருத்துவக் கல்லூரிகளில் பின்தங்கியோருக்கு பொதுக்கோட்டாவில் 82ல் 94 பேர், 83ல் 105 பேர் இந்த ஆண்டு 137 பேர் 50 சதவீதக் கோட்டா மூலம் பின் தங்கியோருக்கு 82ல் 847 பேர், 83-ல் 881 பேர் இந்த ஆண்டு 869 பேர் ஆக இந்த ஆண்டில் மருத்துவக் கல்லூரிகளில் 2 கோட்டாவிலும் சேர்த்து பின்தங்கியோருக்கு மொத்தம் 1,006 இடங்கள் கிடைத்து இருக்கின்றன.

ஆகவே, நுழைவுத்தேர்வினால் பின் தங்கியோருக்கு பாதகம் இல்லை. முந்திய ஆண்டுகளின் எண்ணிக்கையை விட இந்த ஆண்டு அதிகரித்து இருக்கிறது. அதுபோல தாழ்த்தப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்து இருக்கிறது. தாழ்த்தப்பட்ட மாணவர்கள் பொதுகோட்டாவிலும் அதிகம் வந்து இருக்கிறார்கள்.

கேள்வி:- இந்த ஓட்டல் போராட்டம் பற்றி திமுக தலைவர் கருணாநிதி கூறும் பொழுது விலையை கட்டுப்படுத்தும் சக்தி அரசுக்கு இல்லையோ என்கிறாரே?

### கருணாநிதிக்கு சூடச்சூட பதில்

முதல்வர்:- அண்ணா இதற்காக முன்பு பேரணி நடத்தினாரே அப்போது கருணாநிதியும் அமைச்சராக இருந்தாரே.

மக்களுக்கு உள்ள எண்ணத்தை எடுத்துக்காட்டுவது ஒரு முறை, செயல் முறையில் அரசு எப்படி கட்டுப்படுத்துவது என்பது இன்னொரு முறை. ஓட்டல் பண்டங்களின் விலை உயர்வை எதிர்த்து இவரால் எதுவும் செய்ய முடியாது. காரணம் அதனுடன் இவருக்கு தொடர்பு இருக்கிறது. அதில் லாப நஷ்டங்கள் இவருக்கு இருக்கிறது. பங்காளிக்கு எதிராக பங்காளி எதிர்த்து போராடுவாரா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

அண்ணா-ஊழியர்

### வஜ்ரவேல் காலமானார்

சென்னை, ஆக. 22- அண்ணா அலுவலகத்தில் பார்சல் பிரிவில் பணியாற்றிவந்த வஜ்ரவேல் (வயது 42) உடல்நலக் குறைவாக இருந்து நேற்றிரவு காலமானார். இறுதி சடங்குகள் இன்று (22 ந்தேதி) மாலை நடைபெற்றது. 'அண்ணா' அலுவலக ஊழியர்கள் வஜ்ரவேல் உடலுக்கு மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.